ஙசஉ பருப்பு ஒகரம் ஙசஉ கடுகு ஒகரம் ஙசஉ க்கு பாத்ரஸேஷ வ்யவாஜ

12. த ௨ ஹ ப உழுந்து ஒகரம் ௨ ஹ பருப்பு ஒகரம் ௨ ஹ கடுகு ஒகரம் ௨ ஹ நீக்கி வ்யவாஜ த ௨ ௯ ௬ ஹ உழுந்து ஒகரம் ந ஊஹ பருப்பு ஒகரம் ந ஊஹ கடுகு ஒகரம் ங ஊஹ யும் நாலு வகையிலும் பெறக்கடவோமாகவும்

13. தம்மிட குமாரத்தியார் அக்கமனுக்கு புண்யமாகத் திருநந்தவநம் வைக்கவும் திருப்பாடிவேட்டை பெருமாள் எழுந்தருளவும் சடகோப முதலியார் கையில் கொண்டு விட்ட தோட்டம் நாரப்பராசாவின் தோ

14. ட்டத்துக்கு தெற்கு செங்கழநீர் ஓடைக்கு கிழக்கு கள்ளிவளைவுகொல்லைக்கு வடக்கு அய்யங்குளம் வரதயந் தோட்டத்துக்கு மேற்கு இன்னான் கெ(ா)ல்லை நடுவுட்பட்ட நெல்லிக்கொல்லை க க்கு தரம் குழி ரூாகூ௯ க்கு திருவ

15. ாய்மொழி[ந்*]து கொண்டயந்பேரால் வருஷம் க க்கு மாவடை மரவடை குத்தகை ஐ ரு வருஷம் வருஷ(ம)ந் தோறும் பாடிவேட்டச் சிறப்பு பெருமாள் தளிகை கறியமுதும் (த்)திருப்பளித்தாமம் திருமாலை தினமும் தி

16. ருவாய்மொழி[ந்*]து கொண்டயந் நடத்தக்கடவராகவும் இப்படிக் குடுத்துப் பொலியூட்டு உபையமும் தோட்ட உபையமும் சந்த்ராதித்தவரையும் தம்மிட புத்ரபௌத்ர பாரம்பரியாக நடத்தக்கடவோமாகவும்

17. இப்படி சம்மதித்து *ஸிலாஸாஸநம்* பண்ணிக் குடுத்தோம் *ஸிஙய* தேவ *மஹாராஜா*வின் குமாரர் திருப்பதிராஜாவுக்கு பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் இவை கோயில் கணக்குத் திருவத்தியூர் பிரியன் எழுத்து.

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1456 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1534 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 581/1919 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | -- |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 265 |
| அரசன் | : அச்சுதராயர் | | | |

இடம் : அருளாளப் பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்.

குறிப்புரை : ஸ்ரீவில்லிபுத்தூர் பட்டடிபிரான் மகன் திருவேங்கட அண்ணன் பேரருளாளர்க்கு வழிபாட்டிற்கு தாமல் கோட்டத்து உத்திரசோலை கிறாமம் தானமாக வழங்கியுள்ளார்.

**கல்வெட்டு :**

1. ஸுஹஉஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ உந உஹாராஜாயிராஜ ராஜவரஎஶ்வர ஸ்ரீவீரப்ரதாப மூவராயரகண்ட சுரியராயர விஹாட சுஷஉிக்குராய உநொஹயஂகுர ஹூவ ஃ உக்ஷிணப் வஶ்பிஉ ஸஊத்ராயிஶ்வர அச்சுதராய உஹாராயர் ப்ரயிவிராஜ்யஂ வண்ணி அருளாநின்ற ஶகாஸ்தஂ ஆசாருயகூ ன் மேல் செல்லா நின்ற ஜய ஸஂவக்ஸரத்து குஂஹ நாயற்று சுவரவக்ஷத்து ஶதுஃஶியூஂ ஸொஉவாரஊஂ பெற்ற திருவோண நக்ஷத்ரத்து னாள் ஜயங்கொண்டசோழமண்டலத்து சந்திரகிரிராஜ்யத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்து நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்று அருளிய அருளாளப் பெருமாள் கோயில் ஸ்தாநத்தாரோம் சிவில்லிபுத்தூரில் பட்டடிபிரான் புத்ரன் திருவேங்கட அண்ணகளுக்கு சிலாஸாஸநஂ [ப*]ண்ணிக் குடுத்தபடி தம்முட உபையமாக பேரருளாள[ற்*]க்கு விட்ட தாமல் கோட்டத்து உத்திரசோலை கிறாஉஂ ஒன்று இந்த கிறாமத்தில் போந்த முதலுக்கு பெருமாள் அமுது செய்தருள னாள் ஒன்றுக்கு ஸ்ரீபண்டாரத்தில் விடும்

2. . . . . . . காலால் அமுதுபடி ௩) தளிகைமேல் படைக்க பயற்றமுது ௲ நெயி அமுது ஊ வெல்லம் ஊ எரிகரும்பும் விட்டு சமைந்து அமுது செய்தருளிய முதலான வ௵ஸாதம் ங இந்த வ௵ஸ[ா*]தம் குறுணிக்கு விட்டவன் விழுக்காடு னாலில் ஒன்றுக்கு நகரி இராமானுஜ கூடம் திருவேங்கடய்யன் புத௵நு ஒபுளையங்கார் ஆசன்த௵ாகக௱மும் பெற்றுவரகடவராகவும் பாத௵வெஷ௨ வ௵ஸாதம் ஙஜ ஆக ப௰௲ நீக்கி னாலு வகையிலும் பெறும் வ௵ஸாஜ௨ ரு௲ இப்படிக்கு இந்த அமுதுபடி குறுணியும் சந்திராதித௱வரையும் பெருமாள் அமுது செய்தருளும்படிக்கு சிலாஸாஸநம் பண்ணிக் குடுத்தோம் பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோ௨ இப்படிக்கு இவை கோயில் கணக்கு சீயபுரமுடையான் பேரருளாள வி௵யன் அஷ்கிரினாதர் பெருமாப்பிள்ளை எழுத்து ௨

## த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் :- 266

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : சகம் 1472 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1550 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 582/1919 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 266 |
| அரசன் | : சதசிவதேவராயர் | | |

இடம் : அருளாளப் பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்

குறிப்புரை : பூதநாத சிட்டயப்பட்டுலு மகன் ராமபட்டர் என்பவர் வேகவதியில் அமைந்துள்ள இறைவன் ரகுநாதனுக்கு தேவையான அமுதுபடிகளுக்காக சீட்டணஞ்சேரி என்னும் கிராமத்தினைத் தானமாக வழங்கியுள்ளார்.

**கல்வெட்டு :**

1. ஶுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ மந் மஹாராஜாதிராஜ ராஜபரமேஸ்வர மூவராயரகண்ட அரியராயவிபாட அஷ்டதிக்குராய மநோபயங்கர பாஷைக்குத் தப்புவராயரகண்ட பூர்வதக்ஷிண பஸ்சிமோத்தர ஸமுத்ராதிஸ்வர யவநராஜ்ய ஸ்தாபநாசார்ய கஜபதிவிபாட ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீரஸதாஸிவ தேவராய மஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் ௲௪௱௭௰௨ ன் மேல் செல்லாநின்ற ஸாதாரண ஸம்வத்ஸரத்து கும்ப நாயற்று பூர்வபக்ஷத்து த்விதியையும் சநிவாரமும் பெற்ற உத்திரட்டாதி நக்ஷத்ரத்து னாள் ஜெயங்கொண்டசோழமண்டலத்து சந்த்ரகிரி ராஜ்யத்து

2. . . . . . . டுக்கோட்டத்து நகரங் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள்கோவில் ஸ்ரீபண்டாரத்தார் கௌதம கோத்ரத்து ஆஸ்வலாயந ஸூத்ரத்து ரிக்ஸாகை பூதநாதகிட்டய பட்டுலு புத்ர

ராமபட்டற்கு ஶிலாஶாஸநம் பண்ணிக்குடுத்தபடி வேகவதி ரகுனாதனுக்கு தம்மிட உபையமாக விட்ட சீட்டணஞ்சேரி கிராமம் ஒன்றுக்கு ரேகை ௰ ௩௰௨ யிந்தப் பொன் முப்பத்திரண்டுக்கும் தம்மிட பொலியூட்டாக அருளாளன்காலால் விடும் அமுது[படி] ௵ கறியமுது பருப்பமுது நெய்யமுது தயிரமுது எரிகரும்புமாக யிட்டு சமைத்து னாள்தோறும் அமுது செய்தருளும் தளிகை உக க்கு

3\. . . . . . . வ்ருஷாதஃ ௵ க்கு விட்டவந் விழுக்காடு நாலத்தொன்றுக்கு . . . . . . . . . மொத்த்து ஶூஸ்ராயந ஸூத்த்து . . . . . . ஸுரபுத்ரு சாஹெயனுக்கு வ்ருஷாத[ம்*] நானாழியும் பெற்றுகொள்ளகடவராகவும் பாத்ரசேஷம் வ்ருஷாதஃ நாழியுரியும் ஆக வ்ருஷாதஃ அஞ்ஞாழியுரி போய் நீக்கி வ்ருஷாதஃ ௩௲௵ ழ நாலுவகையிலும் பெற்று கொள்ளகடவராகவும் யிந்தபிறகாரம் சந்த்ராதித்யவரையும் புத்ரபௌத்ர பாரம்பரையாக நடத்துவோமாகவும் யிப்படி சம்மதித்து ஶிலாஶாஸநம் பண்ணிக்குடுத்தோம் ராமாபட்டற்கு பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் யிவை கோயில் கணக்கு திருவத்தியூர் வ்ரியந கெருடன் மேலழகியார் புத்ரந அழகியவரதஸ் எழுத்து

## த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் :- 267

மாவட்டம் : காஞ்சிபுரம்
ஆட்சி ஆண்டு : சகம் 1458

வட்டம் : காஞ்சிபுரம்
வரலாற்று ஆண்டு : கி.பி. 1536

ஊர் : காஞ்சிபுரம்
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 583/1919

மொழி : தமிழ், சமஸ்கிருதம்
முன் பதிப்பு : –

எழுத்து : தமிழ், கிரந்தம்

அரசு : விஜயநகரர்
ஊர்க் கல்வெட்டு எண் : 267

அரசன் : அச்சுதேவராயர்

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்

குறிப்புரை : நெடுங்குமார கோத்திரத்தைச் சேர்ந்த பெரியநாடு செட்டி மகன் நாராயண செட்டியார் அருளாளப் பெருமாள் கோயிலில் நடைபெறும் திருஆவணித் திருநாள், திருபுரட்டாசித் திருநாள், திருமாசித் திருநாள், திருவைகாசித் திருநாள் ஆகிய நாட்களில் கெங்கை கொண்டான் மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளும் போது வழிபாட்டிற்காக 550 பொன் அளித்து அதன் வட்டியிலிருந்து வழிபாடு நடத்த ஏற்பாடு செய்துள்ளார்.

### கல்வெட்டு :

1. ஶுஹஉஸ்து ஸ்வஸ்தி [||*] ஸ்ரீஉ௩ உஹாராஜாயிராஜ ராஜவரமெஶ்ர உவராயர் ஹரிஹராயர்விஹாட அஷுஶிக்குராய உனொஹயங்கர ஹாஷெக்குத் தப்புவராயர்கண்ட பூவ௨ உக்ஷிண வஶ்வி௨ உத்திர ஸமுத்ராயீஶ்வர யெவநராஜ் ஸ்தாவனாசாய௨ மஜவதி விஹாட ஸ்ரீவீர வ௨ஶாவ ஸ்ரீவீரஅச்சுதெவஉஹாராயர் வ௨ய்விராஜ்௨ வண்ணி அருளாநின்ற சகாவ்௨ ஆசாருமஅ ௩ மேற் செல்லாநின்ற துற்முகி ஸம்வசுஸரத்து கும்பனாயற்று பூவ௨வக்ஷத்து துவாதெசியும் உத்திராட நக்ஷத்௨மும் பெற்ற புதவாரத்து நாள் ஜயங்கொண்டசோழமண்ட
2. லத்து ஊற்றுகாட்டுக்கோட்டத்து நகரங்காஞ்சிபுரம் திருவத்திஊர் நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரோம் திருப்பதியில் நகரத்தாரில் நெடுங்குமார கோத்திறத்தில் பெரியனாகுசெட்டி புத௨ன் நாராயணசெட்டியாற்கு

சிலாசாஸநம் பண்ணிக்குடுத்தபடி தம்முடைய உபையமாக பேரருளாளற்கு பொலியூட்டுக்கு குடுத்த பொன் ருா௱ரும இந்தப்பொன் அந்நூற்று அன்பதும் பெருமாள் திருவிடையாட்டம் தினையநேரி ஏரிக்கு இட்டபொன் ௨௱ ௨ம ஆற்பாக்கம் ஏரிக்கு இட்டபொன் ௱ சோமங்கலஏரிக்கு இட்டபொன் – ௱

3. பளுவூர் ஏரிக்கு இட்டபொன் ரும தாளிகால் ஆற்றுகாலுக்கு ௲ சம௯ சென்றிய நல்லூர் ஏரிக்கு கால்வாயிக்கு ௲ சம ஆக ௲ ருா௱ரும இந்தப்பொன் அந்நூற்று அன்பதும் இட்டு இந்த கிறாமத்தில் ஏரியிலும் கயக்காலிலும் நீர்பாய்ந்து விளைந்து அதிகம் கண்ட முதல் கொண்டு அமுது செய்தருள விடும் திருவாணித்திருனாள் திருப்புரட்டாசித் திருனாள் திருமாசித் திருனாள் திருவைகாசித் திருனாள் ஆக திருனாள் னாலுக்கு கெங்கைகொண்டான் மண்டபத்தில் பெருமாள் ஏறியருளி இருந்து திருனாள் ஒன்றுக்கு ஆழ்வார்திருனாள் முதல் ஒன்பதாந்திருனாள் வரைக்கு னாள் பத்துக்கு

4. னாள் ஒன்றுக்கு அமுது செய்தருளும் அப்பபடி ஒன்றுக்கு ஹ்ீங நெயி கா௨ வெல்லம் ஹ மிளகு ஊ சீரகம் ஹ ஏலம் ஹ எள்பருப்பு ௯ூ தேங்கா ந வடைப்படி ஒன்றுக்கு உளுந்து ஹ நெயி அமுது ங மிளகு ஊ சீரகம் ஹ சுகியன்படி ஒன்றுக்கு அரிசி ஙம நெயி அமுது ச௨ பயறு ச௨ வெல்லம் நச௨ மிளகு ஊ சீரகம் ஹ எள்ளுபருப்பு ௯ூ தேங்காய் ஒன்று பயற்றமந் திருப்பணாரத்துக்கு பயறு க௨ஹும் பயற்றமந் திருபணாரத்துக்கும் பானக்கத்துக்கும் வெல்லம் க௨ஹ தேங்காபத்து பாநகத்துக்கு மிளகு உ ஏலம் ஊ வாழைப்பழம் ௱ இளநீர் கூம [தட்டு]௱ ம . . .

5. மண்டபம் விதாநிக்க பூவுக்குட்ட ௶ க முறைக்காறிக்கு௶௯ூ எரிகரும்புக்கு ௶வ கெங்கைகொண்டான் மண்டபத்துக்கு படிவகை சுமக்கிற பிராமணர் கூலிக்கு ௶க வ௶ஸாதிக்க சந்தனத்துக்கு ௶க அடைக்காயி அமுதுக்கும் யிலை அமுதுக்கும் ௶க ஆக னாள் ஒன்றுக்கு அப்பபடி க வடைப்பபடி க சுகியன் படி க பயற்றம் திருப்பணாரமும் வாழைப்பழமும் யிளனீர் சந்தனம் அடைக்காயமுது யிலையமுது இவ்வகை ஆக திருனாள் நாலுக்கு னாள் னாற்பதுக்கும் இந்த வ௶காரத்திலே விட்டு அமுது செய்தருள பண்ணக்கடவோமாகவும் இதுவும் திருநாள் ஒன்றுக்கு அஞ்சாந்திருனாளில் திருக்கச்சிநம்பி மட

6. த்தில் ஏறி அருளி இருந்து அமுதுசெய்தருளும் அப்பபடி ஒன்று வடைப்படி ஒன்று சுகியன்படி ஒன்று பயற்றம் திருப்பண்ணியாரம் வெல்லம் வாழைப்பழம் தேங்காய் இளநீர் திருனாள் கட்டளை ஏழாந்திருநாளில் திருத்தேர் திரும்பி வருகையில் திருகச்சினம்பி மடத்து வாசலில் அமுது செய்தருளும் அப்பபடி இரண்டு ஒன்பதாந் திருனாளில் திருக்கச்சினம்பி மடத்தில் ஏறிஅருளி இருந்து அமுது செய்தருளும் அப்பபடி ஒன்று வடைப்படி ஒன்று சுகியன்படி ஒன்று பயற்றம் திருப்பணியாரம் வெல்லம் வாழைப்பழம் இளநீர் கரும்பு கட்டளைப்படி ஆகத்திருனாள் ஒன்றுக்கு திரு

7. க்கச்சிநம்பி மடத்தில் பெருமாள் அமுது செய்தருளும்படி எட்டு ஆகத்திருநாள் நாலுக்கு படி முப்பத்திரண்டு திருவைகாசித்திருநாள் அதிகம் தேர் இரண்டுக்கு அப்பபடி இரண்டு ஆகத்திருநாள் நாலுக்கு அப்பபடி ருா அ வடைப்படி சயஅ திருக்கச்சிநம்பி உறிஅடியில் பொதமிளகு அமுது செய்தருளும் வடைப்படி இரண்டு ஆக வடைப்படி ருய சுகியன் படி சயஅ ஆக படி ாருயசு பயற்றம் திருப்பணூரம் வெல்லம் தேங்காய் இளநீர் வாழைப்பழம் கரும்பு சன்தனம் பாக்கு வெற்றிலை உள்ளதும்

8. திருக்கச்சிநம்பி கோவிலுக்கு னாள் ஒன்றுக்கு திருவிளக்குக்கு ஸ்ரீபண்டாரத்திலே விட்டு வரும் எண்ணை உழக்கு ஆக னாள் தோறும் விட்டுவரக்கடவோமாகவும் ஆக வருஷம் ஒன்றுக்கு அமுது செய்தருளும் படி ருாயசு க்கு படி . . க்கு திருபண்ணியாரம் ருயக க்கு பாத சேஷம் முறைக்காறிக்கு பண்ணியாரம் மூன்று போய் நீக்கி திருபண்ணியாரம் சயஅ க்கு விட்டவன் விழுக்காடு திருப்பண்ணியாரம் யரு பெறும் வகை திருக்கச்சிநம்பி கோயில்க்கு திருப்பணூரம் ச திருவேங்கடச்சிறுக்கன் திருப்பணிப்பி

9. ள்ளைக்கு திருப்பணூரம் ருJ யியல் ஸேவிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திருப்பணூரம் உ சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு . . . தம்மிட ஆசாரியர் அனந்தநம்பிள்ளை அய்யங்காற்கு திருப்பணூரம் உ ஆக திருப்பணூரம் பதின்மூன்றும் பெறக்கடவராகவும் நீக்கித் திருப்பணூரம் முப்பத்தஞ்சுக்கு ஆழ்வார் முறைக்கு திருப்பணூரம் அஞ்சும் முறையிடும் தாதற்கு திருப்பணூரம் இரண்டும் முறைக்கணக்கு பிள்ளைக்கு திருப்பணூரம் ஒன்று ஆக திருப்பணூரம் எட்டும் நீக்கி திருப்பணூரம் இருபத்தெ . . . . . . . . . . . திலே வினியோகம் பண்ணக்கடவோமாகவும் கெங்கை

10. கொண்டான் மண்டபத்தில் திருமஞ்சனம் எடுக்கிற வ௺ாஹணர் கூலிக்கு திருனாள் ஒன்றுக்கு பணம் ஒன்று ஆக திருனாள் னாலுக்கு பணம் னாலும் குடுத்து வரக்கடவோமாகவும் இந்தப்பிறகாரத்துக்கு இந்தப்பொலியூட்டு ஆவ௺ாற்கமும் நடக்கக்கடவதாகவும் இந்ததற்மத்துக்கு யாதொ[ரு*]வர் அஹிதம் பண்ணினவர்கள் கெங்காதீறத்தில் கோவைக் கொன்ற பாவத்தி[ல்*] போகக்கடவர்களாகவும் இப்படி சம்மதித்து சிலாசாஸநம் பண்ணிக்குடுத்தோம் னாராயண செட்டியாற்கு பேரருளாளற் ஸ்ரீபண்டாரத்தாரோம் இவை கோயில்கணக்கு தினையநேரி உடையான் திருவத்தி ஊற்பிறியன் பிரமநயினார் புத்திரன்

11. ஆனைமேல் அழகியார் எழுத்து உ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 268**

மாவட்டம் : காஞ்சிபுரம்
ஆட்சி ஆண்டு : –

வட்டம் : காஞ்சிபுரம்
வரலாற்று ஆண்டு : கி.பி. 14–ஆம் நூற்றாண்டு

ஊர் : காஞ்சிபுரம்
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 585/1919

மொழி : தமிழ், சமஸ்கிருதம்
முன் பதிப்பு : –

எழுத்து : தமிழ், கிரந்தம்

அரசு : போசளர்
ஊர்க் கல்வெட்டு எண் : 268

அரசன் : மூன்றாம் வீரவல்லாளன்

இடம் : அருளாளப் பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்

குறிப்புரை : மன்னன் அரிளனவல்லான் பந்தல்கீழ் வீரவல்லாளன் சிம்மாசனத்தில் தனது தேவியர்களுடன் அமர்ந்து, இருந்து சடகோபன் பாட்டு கேட்டுக்கொண்டிருந்தார். அப்போது சாளுவமங்கு இராசவின் அமைச்சர் பொத்தரசனுக்கு பதினெட்டு நாட்டிலே விளைநில வருவாயில் ஒருபங்கும், அவரது ஆளுகையின் கீழுள்ள ஊர்களில் மாடி வீட்டுக்கு இரண்டு பணமும், கூடவீட்டுக்கு ஒரு பணமும் பெறுவதற்கு அனுமதியளித்துள்ளார்.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[||*] ஸகரு ஸம்ராஸம்ராயிங ஜௌஷிரது ஏஹாரூணை|| ஸ்ரீசக ஹஸ்திகிரிஙவஸ ஜெவஜெவஸ ஙாஸ
2. நவ [||*] ஊஷஹ நாயற்று ஏஊவ ஏவக்ஷத்து உஙஉயும் சனிக்கிழமையும் பெற்ற அத்தத்து நாள் அபிஷேக மண்டபத்து
3. வீரவல்லாளன் ஸிංஹாஸநத்து அரிளனவல்லான் பந்த[ல்*]கீழ் நாமும் நம்பெண்டுகளுடன் சடகோபன் பாட்டு கேளா நி
4. ற்க சாளுவமெங்கு மஹா இராசாவின் ஏதாநி ஸ்ரீவத்ஸ மொதுத்து நம் மகன் பொத்தரசன் தான் நமக்கு நல்லபடியு
5. ம் நம் வீடு நோக்கிசெய்யும் நன்மைகளும் நம் வீடு கருமங்கேட்கும் பெருமாள்தாஸனும் நம்மடிகளும் சொல்ல

6. கேட்(ட)டோம் நம்வீட்டுகாரியம் தான் பாத்து நடத்திந படியாலே தநக்கு நாம் குடுத்கபடி நாம் உண்டகலமும் ப

7. திந் எட்டு நாட்டிலே நமக்கு வரும் விளையத்திலே ஒருவிளையமும் குடுத்து நாம் உகந்த தீபதேசங்களில்

8. மா[டி]வீட்டுக்கு இரண்டுபணமும் கூடவீட்டுக்கு ஒருபணமும் குடுக்க சொல்லி விட்டோ

9. ம் நம் தெற்க்கு தெருவிலே ஒரு மனையும் குடுத்தோம் இப்படி தநக்கு நாம்

10. குடுத்கபடிக்கு தநக்கு நாம் உடுத்கபடியும் முடித்கபடியும் பூசிந

11. படியும் குடுத்தோம் இப்படி திருவாய்மலன்தருளின ப

12. டிக்கு திருமன்திர ஓலை எழுதிநமைக்கு இவை

13. பேர்அருளாள விரியன் எழுத்து உ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 269**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1510 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1588 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 587/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 269 |
| அரசன் | : ஸ்ரீவீரவேங்கடபதி | | | |

இடம் : அருளாளப் பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்

குறிப்புரை : பத்தங்கி நயினாரய்யன் பேரனும் அண்ணாவைய்யங்கார் மகனுமான ரங்கப்பயங்கார் என்பவர் பேரருளாற்கு அமுது செய்ய வேண்டி படைவீட்டு ராச்சியத்து களத்தூர் கோட்டத்து குறும்பிறை நாட்டு ஆலம்பாக்கம், ஆனம்பாடி ஆகிய ஊர்களை எட்டூர் திருமலைக் குமார தத்தாசார்யரய்யன் வசம் வழங்கியுள்ளார்.

**கல்வெட்டு :**

1. ௳ ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாராஜாதிராஜ ராஜபரமேஸ்வர மூவராயரகண்ட ஹரியராயரவிபாடந் சுஷுதிக்குராய மனோபயங்கர பாஷெக்குத் தப்புவராயரகண்ட கண்டநாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் பூவ்வ தக்ஷிண பஸ்சிமொத்தர

2. ஸமுத்ராதிபஸ்வர யௌவநராஜ்ய ஸ்தாபநாச[ா*]ர்ய கஜவேட்டைகண்டருளிய ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீரவேங்கடபதி தெவமஹாராயர் ப்ருத்விராஜ்யம் பண்ணியருளாநின்ற சகாப்தம் தூருாய ந மேல் செல்லாநின்ற ஸவ்வதாரி ஸம்வத்ஸரத்து ஸிம்ஹநாயற்று

3. பூவ்வபக்ஷத்து பஞ்சமியும் சனிவாரமும் பெற்ற சித்ரா நக்ஷத்ரத்து நாள் ஜெயங்கொண்டசோழமண்டலத்து சந்த்ரகிரிராஜ்யத்து ஊற்றுக்காட்டு கோட்டத்து நகரங்காஞ்சிபும் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள்

4. கோயில் ஸ்ரீபண்டாரத்தாரும் ஸ்ரீகாரியஞ்செய்யும் ஸ்ரீமக வேஷமாமு
வ்ருதிஷாபநாசாயரு உஹெயவேதாஹாசாயருரான எட்டூர் திருமலைகுமார
தாத்தாசாயருர் அய்யநு சஹதி சீராமையங்காரும் ஹாரஹூாஜமொத்ருத்து

5. [த்ராஹூா]யந ஸூத்ருத்து ஸாமசாவாஹூாயியாந பத்தங்கி நயினாரய்யன்
வவுத்ரரு அண்ணாவையங்கார் புத்ரன் றங்கப்பயங்காருக்கு
சிலாபாஸநம் பண்ணிக்குடுத்தபடி தம்முட உஹெயமாக ஸ்வாமி
பேரருளாளப் பெருமாளுக்கு தநிவழி அவஸரம் அமுது செ

6. ய்தருள ஸ்ரீமக வேஷாமரு வ்ருதிஷாபநாசாயரு உஹெய வேதாஹாசாயருராந
எட்டூர் திருமலைகுமாரதாத்தாசாயருரய்யன் கையில்தாம் வ்ருதிமரு ஹித்து
ஸஷ்வீரத்த படைவீட்டுராச்சியத்து களத்தூர்க்கோட்டத்து குறும்பறை
னாட்டு ஆலம்பாக்கம் ஆனம்பாடி

7. க்ராமத்துக்கு ரொக்கம் ஶூ ௱௫௰௧ ௶௫ இன்த னூற்றன்பத்தொரு பொன்னும்
பணம் அஞ்சுக்கு னாள் ௧ க்கு பெருமாள் அமுதுசெய்தருள அவஸர
த்தளிகை ௰௪ க்கு விடும் ஹூசாத ஆக ௵ ௧ க்கு னாள் ௩ா௪௰ருக்கு
கூட்டிந ஹூசா அ௰௪ாஞக்கு

8. ருல் ௩ க்கு ஶூ ௲உா௰௪௭ ௲ க்கு ௶௧ க்கு ஶூ ௪ விக்கு பேர் ௨௰௧ ௶௪௲)
தளிகைமேல் படைக்க னாள் ௧ க்கு பயறு ௨ ஆக ௵ ௧ க்கு பயறு
௩ா ௮த ௫ க்கு ௶௧ க்கு பயறு ௩௰ விலைக்கு ஶூ ௧௫)  னாள் ௧
க்கு தயிர் ௮ ௸ ௵ம் ௧ க்கு

9. தயிர் எாத௩௮ க்கு ௶௪ க்கு தயிர் த விலைக்கு ஶூ ௨ ௶௨௰ எரிகரும்பு
விலைக்கு னாள் ௧ க்கு ௶ ௯௰௮ ௸ ௵ ௧ க்கு ஶூ ௨௰௪ ௶ ௩௰
நவபாண்டவத்துக்கு ௵ ௧ க்கு ஶூ ௧ ௶ அ௲ ௸௵ ௧ க்கு ஶூ
௱௫௰௧ ௶௫ இன்த பொன்னூற்றன்ப

10. த்தொன்றும் பணம் அஞ்சுக்கும் யின்தபடி அமுதுசெய்தருளி விட்டவன்
விழுக்காடு ௪ல் ௧ க்கு ௶ ௲) பாத்திரபோஷ ஸ்வயவாஹியஷ பிங்ரு
௲ ௸ ௶ ௲ங௫௨௲ போயி நீக்கி ௶ ஷஹ௮௨௲௩௰ ம் ஸ்ரீபண்டார

11. த்திலே பிறக்கடைவாராகவும் யின்த ய௨ஷ ஶாநாயி விநிவிக்ருயத்துக்கு
யோமூமாக தமக்கு விட்டவன் விழுக்காடு வருன் தளிகை னாலும்
சூவதராகஙுஷாயியாக வூத்ர வவுத்ர வாரம்பரையாக நடத்தக்கடை

12. வோமாகவும் யிப்படி சம்மதித்து சிலாஶாஸநம் பண்ணிக்குடுதோம் ஸாஉவேஉஃ றங்கப்பய்யங்காருக்கு பேரருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரும் ஸ்ரீகாரியஞ் செ

13. ய்யும் சன்னதி சீராமையங்காரும் இன்த ஶிலாஶாஸநம் எழுதிநமைக்கு கோயில் கணக்கு பேரருளாளவிர்யஙு ஶீயபுரமுடையான் பெரியபெருமாள் ஸூத்ரஙு மாகியப்பன் எழுத்து ॥ ஸ்வஉத்துதாகஃ–

14. ஸ்விஶுணஃ ஸுணாஃ வாஉகதாநுவாஷநஃ । வாஉகதாவஹாரெண ஸ்வஉகதஷிஷுஷஃ ஹவெக । உாநவாஷநயொஉஉ³ஜ்ஞெ உாநாக ஸெர்யொநுவாஷநஃ । உாநாக ஸ்வஸ்துவோவெந்ாதி வாஷநாஉவ்யூதஃ வஉஃ । ஶூஹஉஸூ ॥

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 270**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1504 |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1582 |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 588/1919 |
| மொழி | : | தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 270 |
| அரசன் | : | ஸ்ரீரங்கதேவமகாராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் இரண்டாம் திருச்சுற்று வடக்குச் சுவர்

குறிப்புரை : திருவத்தியூர் அருளாளப் பெருமாள் வாசபேய்ய யாகம் பண்ணி யாகசாலையில் எழுந்தருளும்போது சோழமண்டலத்து இடைவாசல் சீர்மையிலுள்ள தௌத்தெறு கிராமம் தானம் அளிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ௳ ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஸ்ரீவீரப்ரதாப ஹரியராயரவிபாட பாஷைக்குதப்புவராயரகண்டந் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதாந் பூர்வதக்ஷிண பஸ்சிமொத்தர ஸமுத்ராதிபதி யௌவநராஜ்ய ஸ்தாபனாசார்ய் ஸௌஜவேட்டை கண்டருளிய ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீர ஸ்ரீரங்கதேவமஹாராயர் ப்ருதிவி ராஜ்யம்பண்ணி அருளாநின்ற ஸகாப்தம் 1504 மேல் செல்லாநின்ற சித்திறபாநு ஸம்வத்ஸரத்து துலானாயற்று பூர்வபக்ஷத்து பஞ்சமியும் ஆதித்யவாரமும் பெற்ற மூல நக்ஷத்ரத்துநாள் ஜெயங்கொண்ட சோழமண்டலத்து சந்திரகிரிராஜ்யத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்து நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய பேரருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தார் ஸ்ரீமதே ராமாநுஜாய நம
2. ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்தாசார்ய்ரான திருமலைகும்பகோணம் திருமாலிருஞ்சோலை ஆசார்யர்க்கு

ஸிலாஸாவஸநு பண்ணிக்குடுத்தபடி இற்றைனாள் வாசபேய்யாகம் பண்ணி யாகஸாலைக்கு பெருமாள் எழுந்தருளுகையில் தாராபூவ_மாக விட்ட சோழமண்டலத்து இடைவாசல் சீர்மையுக்குள்கிறாமமாக ஸமற்பித்த தௌத்தெறு கிறாமம் க க்கு ரூ நாஉ௰ இன்தப் பொன் முன்னூற்று இருபதுக்கு கட்டிந பொலியூட்டு விபரம் திருவாடித்திருனாளுக்கு திருக்கொடியாழ்வாறு ஏ[றிய]ருளி பெருமாள் கெங்கைகொண்டான் மண்டத்திலும் திரும்பி எழுன்தருளி திருவாழியாழ்வார் கோயிலிலே விடாயாற்றிக்கு அமுதுசெய்தருள ஆழ்வார்திருனாள் முதல் ௰ திருனாள் வரைக்கு னாள் ௰க க்கு விடாத னாள் எ) திருனாள் அ) திருனாள் ௰ திருனாள் ஆக னாள் ந போய் நீக்கி னாள் அ க்கு னாள் க க்கு திருமஞ்சநங் கொண்டருள

3. திருமுன்குத்துவிளக்கு நெயி உ திருமஞ்சநம் எண்ணை வ ரு மாத்திரதாநம் ஊ நசவ திருமஞ்சநம் இட்டலிபடி க க்கு ஊ ரு உளுந்து ஙு நெயி வ வெடிசஉ சுக்கு௰ உ ஏலம் ௰ க தெத்தியோதநம் ஊ த தயிர் த நெயி ரூ சுக்கு௰ க ஏலம்௰ ௭ பருப்பு ப பொங்கல் ஊ ரு பயறு உங நெயி ரூ னாயகம் ஊ ம ரு சாற்றுக்கூன் க க்கு ஸஜ பருப்புச்சட்டி க க்கு பயறு ரு நெயிச்சட்டி க க்கு நெயி உரி கறிநாயகத்தளிகை க கறியமுது பொரிக்க கூ மிளகு ரு நெயி . . .

த.நா.அ. தொல்லியல் துறை                    தொடர் எண் :- 271

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : சக. 1473 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1551 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 591/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 271 |
| அரசன் | : சதாசிவராயர் | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் திருமாணிக்கவரதர் சன்னதி தெற்குச் சுவர்.

குறிப்புரை : மகாமண்டலேசுவர ராமராஜ விட்டல ராஜீ, சின்னதிம்மராஜு, பாப்புத்திம்மய தேவ மகாராஜா ஆகியோரின் நலன் வேண்டி இப்பகுதி முகவரான தளவாய் திம்மராஜா அவர்களின் நாயக்கர் தனத்தின் (நிர்வாகத்தின்) கீழுள்ள செங்கழுநீர்பட்டு சீர்மையில் அஞ்சூர் அருகேயுள்ள கிராமம் மேற்பாக்கம் என்னும் ஊர் அருளாளப் பெருமாள் கோயில் தினசரி வழிபாட்டிற்கு தானமாக வழங்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[॥*] (பூமாது புணரப்புவிமாது வளர ந ட)ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஸ்ரீவீரப்ரதாப ஹரியராயவிபாட பாஷைக்குத் தப்புவராயரகண்ட பூர்வ தக்ஷிண பஸ்சிமொத்திர ஸமுத்ராதிபதி யெவநராஜ்ய ஸ்தாபநாசார்ய கஜபதிவிபாட ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீரஸதாசிவ தேவமஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணியருளாநின்ற ஸகாப்தம் ௲௪௱௭௰௩ க்கு
2. மேல் செல்லாநின்ற விரோதிக்ருது ஸம்வத்ஸரத்து மகர நாயற்று பூர்வ பக்ஷத்து ஏகாதஸியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற ஸ்வாதி நக்ஷத்ரத்து நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து சந்த்ரகிரிராஜ்யத்து

ஊற்றுக்காட்டு கோட்டத்து நகரங் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரோம் ஸூஜெ்ைய மொத்த்து ஸூவஸூ ஸவஸூகூத்து ஸ்ரீ உஹாஉணூலெஸூ-

3. ர ராஉராஜ விட்டலராஜூ சின்னதிம்மராஜூ பாப்புத்திம்ம[யதெவ] உஹாராஜ அய்யன் காரியத்துக்கு கற்தர் தளவாய்த் திம்மராஜா அவர்களுக்கு ஸிஷாஸாஸநம் பண்ணிக்குடுத்தபடி தம்மிட நாயக்கத்தனச் சீர்மையான செங்கழுநீர்ப்பட்டுச் சீர்மையில் ஸ்ரீ உஹாஉணூலெஸூர ராஉராஜ விட்டல தெவஉஹாராஜா அவர்களுக்கு சின்னதிம்மய தெவ உஹாராஜா அவர்களுக்கு பாப்பத்திம்மய

4. தெவ உஹாராஜா அவர்களுக்கு புணூமாக பேரருளாளற்க்குத் த[ம்*]மிட பொலியூட்டு உபயமாக ஸஉற்பித்த அஞ்சூர் சமீபத்தில் மேற்பாக்கம் ரூாமம் ஒன்றுக்கு விபரம் வடபாற்கு எல்லை செங்குன்றம் தாச்சாடிமங்கலத்துக்கு தெற்கு தெற்கெல்லை அஞ்சூர் எல்லைக்கு வடக்கு கிழக்கு எல்லை தொண்டமங்[கலத்துக்கு] மேற்கு மேற்கெல்லை சத்திமங்கலத்துப் பாறேரிக்கு கி

5. ழக்கு இன்னாள்கெல்லைக்கு நடுவுட்பட்ட மேற்பாக்கம் ரூாமம் ஒன்றுக்கு ரெகை ஙூ யரு அருளாளன் காலால் ஈரும ஈ இந்த பொன் பதின்அஞ்சும் நெல்லு நூற்றன்பதின்க[ல]த்துக்கும் நெடுங்குன்ற சேக்கிழார் குழைஞ்சார் தாத்தாமுதலியார் சடையமுதலியார் அவர்களுக்கு வருஷம் மார்கழி மீ கூ வ முதல் வாடாவொட்டுக் காணிப்பற்றாக . . .

6. ளை பிள்ளை தலைமுறையாக குத்தகையாக நடந்து வருஷம்(ந்)தோறும் செலுத்தும் வருஷம் க க்கு ஙூ யரு)ரூ ஈருஎ க்கு நாள் க க்கு பேரருளாளர் அமுது செய்தருள விடும் அருளாளன்காலால் அமுதுபடி . . . கும் தளிகை மேல் படைக்க நெய்யமுது தயிரமுது கறியமுது பருப்பமு[து*] வெல்லமும் எரிகரும்புமாக விட்டு சமைத்து அமுது செய்தருளின வூ-

7. ஸாதம் ஹ க்கு விட்டவன் விழுக்காடு நாலத்தொன்றுக்கு தாங்கள் கட்டளையிட்ட நெடுங்குன்றம் செத்தி தாத்தாமுதலியார் சடையமுத[லி*]யார் பெறும் வூசாதம் சஉ பாதூஸெஷம் வூஸாதம் உ உரி வூஸாதம் .

உரி நீக்கி வ்ருஸாதம் ஙஉ உரியும் நாலுவகையிலும் பெறக்கடவோமாகவும்
அநத்வூர் நெல்லு சடையமுதலியார்[சித்தியிட்டு ஏற்று]வர விடக்கடவராக

8. [வும்]இந்த பொலியூட்டு உபயம் *சந்த்ராதித்ய*வரையும் நடத்தக்கடவோமாகவும்
இப்படி சம்மதித்து *ஸிலாஸாஸநம்* பண்ணிக்குடுத்தோம் தளவாய் திமுராசா
அவர்களுக்கு பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் இவை கோமில் கணக்கு
திருவத்தியூர் வித்யன் எழுத்து ஹ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 272**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1471 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1549 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 592/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 272 |
| அரசன் | : சதாசிவராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் கருமாணிக்கவரதர் சன்னதி வடக்குச் சுவர்

குறிப்புரை : இராமராஜ திம்மராஜ சின்னதிம்மயதேவரின் முகவரான தளவாய் கொப்பு நாயக்கரால் இரையூர் கிராமத்தின் வரி வருவாய் 120 பொன்னினை அருளாளப்பெருமாள் வழிபாட்டிற்காகவும், திருமாலைகளுக்கும், திருமாலை வடைப்படி, வெண்ணைக்காகவும் வழங்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. உ ஶுபமஸ்து ஸ்வஸ்தி [॥*] ஸ்ரீமந் மஹாராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஶ்ரீவீரராயர் மண்ட ஹரியராயவிபாட பாஷை[கு]த்ராய மந்நாஹயங்கர ஹாலெஷெக்குத் தப்புவராயர்மண்ட பூர்வ தக்ஷிண பஶ்சிம உத்தர ஸமுத்[ர*]யிஶ்வர யெவநர[ா*]ஜ்ய ஸ்தாபநாசார்ய கஜபதி விபாட ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீரஸதாஶிவ தேவ மஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி

2. யருளாநின்ற ஶகாப்தம் ஆசாளயக ரு மேல் செல்லாநின்ற ஸௌம்ய ஸம்வத்ஸரத்து கற்கடக நாயற்று பூர்வபக்ஷத்து பஞ்சமியும் ஶுக்ரவாரமும் பெற்ற ரெவதி நக்ஷத்ரத்து நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து சந்த்ரகிரி ராஜ்யத்து ஊற்றுக்காட்டுக்கோட்டத்து நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரோம் ஆத்ரெயகோத்ரத்து ஆப-

3. ஸூவஸ்தி ஸ்ரீமந் மஹாமண்டலேஸ்வர ராம[ர*]ஜத்தும்மராஜ ஸின்நத்தும்மய தேவமஹாராஜாவின் காரியத்துக்கு கர்தரான தளவாய் கொப்புநாயக்கர் அவர்களுக்கு ஸிலாஸாஸநம் பண்ணிக்குடுத்தபடி ஸ்ரீமந் மஹாமண்டலேஸ்வர ராமராஜத்தும்மராஜ விட்டலய தேவமஹாராஜா ஸின்நத்தும்மயதேவமஹாராஜா

4. பாப்[பு] திம்மய தேவமஹாராஜா அவர்களுக்கு புண்யமாகப் பேரருளாளர்குத் தம்மிட பொலியூட்டு உபையமாக ஸமர்பித்த இரையூர் க்ராமம் ஒன்றுக்கு ரேகை ௲ ௱உய க்கு கொப்பு நாயக்கர் பேரருளாளற்கு கட்டளையிட்ட திருனந்தவான தோட்டம் பண்ணிகிற ஸ்ரீவைஷ்ணவ அப்பக்கொண்டயன் வஸதிலே கு

5. டுக்கும் ௲ உய நீக்கி பொந் ௱ நாள் க அந்தியம் போது திருமாலை சாத்தும் வேளையிலே பெருமாள் அமுதுசெய்தருளவிடும் திருமாலை வடைப்படிக்கு விடும் உழுந்து ஹு நெய் ங மிளகு ஐ சீரகம் ஐ) பெருமாள் அமுது செய்தருளின வடை ருயக க்கு விட்டவன் விழுக்காடு நாலத்

6. தொன்றுக்கு வடை யங க்கு பதின்எண்பூமி ஸ்ரீவிஷ்ணுவாள் தெரிஞக்கொள்ள வடை ய வாயூலமொத்ர ஸூவஸ்ஷ ஸத்ர யஜுஸாகாத்யாயரான . . . கஞாடை ஸாவநாசாயூர் குமாரர் ஸ்ரீரங்காசாயூற்கு வடை உ கந்தாடைக்கொன்மன ராமாநுஜகூடத்துக்கு வடை க ஆக வடை ங பாத்ரபெஸஷம் மு

7. றைக்காறிக்கு வடை ங ஆக வடை யகூ போய் நீக்கி வடை ஙயரு ம் நாலுவகையிலும் பெறக்கடவோமாகவும் இதுவும் வந . த்தாறு தெளு ப்பலரும் செட்டியப்பசெட்டியார் உள்ளிட்டாரும் கொப்புநாயக்கற்கு திருப்பளித் திருனாளிலே செட்டிதானத்துக்கும் வருஷம் க க்கு ௲ யரு க்கு தளவாய் திம்மராஜாக்கட்டளையிட்ட திருப்பாடிவேட்டைத்தே

8. ாப்பு திருநன்தவாநம் ஆள் சீவிதத்துக்கு ஜீயர் . . சாத்தாத தேவபெருமாள் வசதிலெ செலும் ௲ யரு திருமாலை கட்டிற சாத்தா ஸ்ரீவிஷ்ணுவாள் சீவிதத்துக்கு ௲ ௬பக திருப்பாடிவேட்டைச்சிறப்புக்கு ௲ உபகூ ஆக ௲ உய. போய் நீக்கி ௲ ஙய க்கு விட்டலைய தேவமஹாராஜா ஸிந்நத்திம்மய தேவமஹாராஜா பாப்புத்திம்ம

9. யஜெவஹொஶராஜாவுக்கும் புண்ணியமாகப் பேரருளாளர் அமுதுசெய்தருள தளவாய்த்திம்மராஜாவின் உபயமாக கட்டளையிட்ட வெண்ணைக்கு நாள் க க்கு ௱க ஞூ க க்கு கட்டளையிட்ட ஊ ௲ய இப்பெருமாள் அமுது செய்தருளின நாள் க க்கு வெண்ணைக்கு விட்டவந் விழுக்காடு நாலத்தொன்றுக்கு வ ரூ௨ வெண்

10. ணையும் . . . . . ப்பொரெற்றுப்பிள்ளைக்கு குடுத்து நீக்கி வெண்ணையும் நாலுவகையிலும் பெறக்கடவோமாகவும் யிந்தப்பொலியூட்டுப் படி சந்த்ராதித்தவரையும் தங்களிட புத்ரபௌத்ர பாரம்பரையாக நடத்தக்கடவோமாகவும் இப்படி சம்மதித்து ஶிலாஶாஸநம் பண்ணிக்குடுத்தோம் தளவாய் கொப்பு நா

11. யக்கற்கும் தளவாய்த்திம்மராஜாவுக்கு பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் யிவை கோயில் கணக்குத் திருவத்தியூற்பிரியன் எழுத்து உ

## த.நா.அ. தொல்லியல் துறை

## தொடர் எண் :- 273

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 593/1919 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | | ஊர்க் கல்வெட்டு எண் | : | 273 |
| அரசன் | : | | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிஷேக மண்டபத்துக்கிழக்குச் சுவர்

குறிப்புரை : வடமண்டலத்து விசிற நாட்டு இராமச்சந்திரன் என்பவன் பெருமாள் கோயிலில் திருநந்தாவிளக்கு ஒன்று எரிக்க முப்பது பசு, காளை ஒன்றும் கோயில் தானத்தாரிடம் அளித்துள்ளான். தினமும் அரியென்னவல்லான் நாழியால் நெய் உழக்கும், தயிர் அமுது நாழியும், கோயிற் தேவைகளுக்காகவும் இதனை பயன் படுத்திக்கொள்ள வழிவகைச் செய்துள்ளான்.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[॥*] வடமண்டலத்து விசிறநாட்டில் சிராமசந்திரன் பெருமாளுக்கு உ ண்டாவது ஆனிமாத்தில் ஒருநா
2. ள் திருநன்(த்)தா விளக்காக வரவிட்ட பசு முப்பது இஷபம் ஒன்றும் கைக்கொண்டு இன்னாள் முதல் அரியென்
3. னவல்லான் நாழியால் நெய் உழக்கும் தயிர்அமுது நாழியும் கோயிற்தேவைகளும் சந்திராதித்தவரை செ
4. லுத்தக்கடவதாக சிலாலேகை பண்ணிக்குடுததோம் பெருமாள் கோயிற்தானத்தோம் உ

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : சகம் 1448 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1526 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 599/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 274 |
| அரசன் | : கிருஷ்ணதேவராயர் | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிஷேக மண்டபக் கிழக்குச் சுவர்.

குறிப்புரை : திருவைகாசித் திருநாள் மூன்றாம் திருநாள், திருமாசித் திருநாள் மூன்றாம் திருநாள், திருவாவணித் திருநாள், திருப்புரட்டாசி ஆகிய திருநாட்களில் சுகியன்படி இறைவனுக்கு படைக்க வேண்டி 100 பணம் அளித்து அதன் வட்டியிலிருந்து செலவு செய்து வழிவகைச் செய்யப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி [।।*] ஸ்ரீமந் மஹ[ா*]ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஸ்ரீவீரப்ரதாப [க்ரி]ஷ்ணதேவமஹாராயர் ப்ருதிவீராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஶகாப்தம் ஆயிரத்து நானூற்று நாற்பத்தெட்டின் மேல் செல்லாநின்ற வ்யய ஸம்வத்ஸரத்து ரிஷபநாயற்று பூர்வபக்ஷத்து த்ரயோதசியும் பூசமும் பெற்ற மங்[க*]ள வ[ா*]ரத்து னாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து யெயில் கோட்டத்து நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர்

2. நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தார் திருப்பதியில் ஸர்வநாதபண்டிதர் பெண் நயினாவதி ஆசார்ய க்ருபை உண்டாநபடியினாலே தேவர்க்கும் பண்டிதர் அப்பையயங்கார்பதி . .

டியாலே அலைமேல்மங்கைக்கும் சிலாபராவஸநம் பண்ணிக்குடுத்தபடி பேரருளாளப் பெருமாளுக்கு திருவையாசித் திருநாள் முன்றாந்திருநாளுக்கும் திருமாசித் திருநாள் மூன்றாந்திருநாளிலும் தேவம்மன் உபயமாகவிடும் சுகியன் படி உ க்கு சு

3. கியன்படி க க்கு ஹுிங பயறு ஙசஉ வெல்லம் ஙசஉ நெயி சஉ தேங்காயி க மிளகு ஷ சீரகம் ஹு எள்ளு ஶு ஆகவிட்டு சமையும் சுகியன்படி இரண்டும் திருவாவணித் திருநாளுக்கு அ. . . . . திருப்புரட்டாதித் திருநாளில் விடும் சுகியன்படி கS ஆக சுகியன்படி இரண்டுக்கும் அந்த விழுக்காடுலே விட்டு சமையும் சுகியன்படி உ ஆக சுகியன்படி ச க்கும் ρ ர இப்பணம் னூறுக்கும் பலிசைக்கு சிலவாக சுகியன்படி க க்கு சமைஞ்சு அமுதுசெ

4. ய்யும் சுகியன் ருயக க்கு பாத₇ஸேஷத்துக்கு சுகியன் உ திருமடப்பள்ளி முறைக்காறிக்கு சுகியன் ஒன்றும் வி[ட்டவன்] விழுக்க[ா*]ட்டு சுகியன் பதிமூன்றும் ஆக சுகியன் யசு நி. . . . . . . . . .வோமாகவும் இந்த பொலிஊட்டு ஆசந்திறாக்கமும் நடத்திக்குடு. . . .டைவோமாகவும் இவை கோயில் கணக்கு திருநயன்னூருடையன் பிரமநயினார் எழுத்து விட்டவன் விழுக்காட்டில் சுகியன் பதிமூன்றில் பதிநெண்பூமி ஸ்ரீவெஷ்ணவாள்பெறும் சுகியன் ச

## த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் :- 275

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1462 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1540 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 600/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 275 |
| அரசன் | : அச்சுததேவராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிஷேக மண்டபக் கிழக்குச்சுவர்

குறிப்புரை : காடவராயன்பட்டு அகரத்தைச் சேர்ந்த குரோவி வேங்கடத்தப்பன் மகன் அருளாளப்பெருமாளுக்கு அமுது செய்தருள பணம் அளித்துள்ளான்.

**கல்வெட்டு :**

1. ஸ்ரீமந்மஹாமண்டலேஸ்வர ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமந் மஹா[ரா*]ஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீர அச்சுதராய மஹாராயர் பூர்வ மேற்கு தப்புவராயர்கண்ட ... மூவராயர்கண்ட அரியராயவிபாட பாஷைக்கு தப்புவராயர்கண்ட பூர்வ தக்ஷிண பஸ்சிம ஸமுத்ராதிபதி ஸ்ரீவீர ப்ரதாப ஸ்ரீவீர அச்சுதராய மஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஸகாப்தம் ௲௪௱௬௰௨ ........ சூர்த்தவாரமும் பெற்ற ஹஸ்த நக்ஷத்ரத்து நாள் ஜயங்கொண்ட–
2. சோழமண்டலத்து சந்த்ரகிரி ராஜ்யத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்து நகரங் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாப்பெருமாள் கோயில் ஸ்தானத்தாரோம் காடவராயன்பட்டு அகரத்து குரோவி வேங்கடத்தப்ப. . த்ர. . வான வெத . . . கப்பெருமாள் . . ற்கு ஸிலாஸாஸநம் பண்ணிக்குடுத்தபடி பேரருளாளற்குத் . . . . . . . . .
3. இந்த திருநாள் ௪ க்கு திருமுளைத்திருநாளில் திருக்கொடி ஏறி கெருடன் மண்டபத்திலே எழுந்தருளியிருந்து அமுதுசெய்தருள ஸ்தானத்தார்

கூஷ்ஹாயபூவை கையில் குடுத்த ௩ சய க்கு பலிசைக்கு சிலவாக கூஷ்ஹாயபூவை திருநாள் ச ல் விடும் ஹூ அரை அப்பப்படி ச விட்டுச்சமைந்து பாத பேஷ முறைக்காறி விட்டவன் விழு

4. (விழு)க்காடு பி . . . யா க்கு பெறும் விபரம் வாயுவெழிசிங்கப்பெருமாள் ஜிக்ஷிதர் அருளுப்பாடுபெறும் . ந–உ ஆஸியத்துக்கு பூவைக்கு . . ங ௨ ந சீதரபட்டற்கு ௫ . . திருவோலக்கஞ்செய்வாற்கு ய ரூ ஹு ௭ வெள்ளிவுரு அத்தையனுக்கு ௫ ரூ ஹு ௭ சடகோபமுதலியாற்கு ய ரூ ஹு ௭ . . யாள் தெரு சீயர்கு ய ரூ ஹு க இயல் ஸ்ரீவயிஷ்ணவாளுக்–

5. கு ஸிலாஸாஸநம் பண்ணிக்குடுத்தோம் வாயுவெழி சிங்கப்பெருமாள் ஜிக்ஷிதற்கு ஸூாநத்தோம் இவை கோயிற்கணக்கு சீயபுரமுடையான் பேரருளாள வியநு நல்லதம்பி எழுத்து[||*]

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 276**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1431 |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1509 |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 601/1919 |
| மொழி | : | தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 276 |
| அரசன் | : | வீரநரசிங்கதேவ மகாராயர் | | | |
| இடம் | : | அருளாளப்பெருமாள் கோமில் அபிஷேகமண்டபக் கிழக்குச் சுவர் | | | |
| குறிப்புரை | : | நரசிங்கராயபுரத்து நகரத்தாரில் செவ்வ செட்டி மகன் திருமலை செட்டி என்பவர் பேரருளாளருக்கு இட்டலி அமுதுபடி மற்றும் திருப்பணி திருநாள் சிறப்புக்கும் வேண்டி 3000 பணம் அளித்துள்ளார். | | | |

**கல்வெட்டு :**

1. ஸுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீமந்மஹாமண்டலெஸ்வர ஸ்ரீஜஹகு வீர நரஸிம்மய்ய தெவமஹாஇராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஸகாப்தம் ஆசாநய[க] ன்மேல் செல்லாநின்ற ரெஷநாயற்று அபரபக்ஷத்து [த்ரு]யொதஸியும் மங்களவாரமும் பெற்ற ரேவதி நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து . . . . . . . . . . மாள் கோமில் ஸ்ரீபண்டாரத்தாரோம். . மில் நரசிங்கஇராயபுரத்து நகரத்தாரில் ஆமிருநகருஷி மொத்ருத்து கெந்தமு செவ்வசெட்டி மகன் திருமலைசெட்டிக்கு ஸிலாஸாஸநம் பண்ணிக்குடுத்தபடி பேரருளாளர்க்கு இட்டலியை படிக்கும் திருப்பளியோட திருநாள்சிறப்புக்கும் பொலி–

2. ஊட்டாகக்குடுத்த புருக்ஷ இந்தப்பணம் மூவாயிரத்துக்கும் சிலவு ஆக இட்டலியைப்படி க க்கு நாள் ஒன்றுக்கு அரியென்வல்லான் காலால் விடும் ஊஙசஉ உழுந்து ங நெய் எ சக்கரை உ இஞ்சி ரு சீரகம் ரு உப்பமுது உழக்கு பெருங்காயம் காசுஇடை இரண்டும் ஆக சமஞ்சு

அமு . . . . . . . . . . . றைகாறிக்கு மூன்று இட்டலியையும் விட்டவன் விழுக்காட்டுக்கு சிலவு ஆக திருக்கச்சிநம்பிக்கு இரண்டும் நின்ற இட்டலியை நாலுவகையிலும் பெறக்கடவராகவும் திருப்பள்ளிஓ[டை] திருநாளில் முதல் திருநாள் சிறப்புக்கு விடும் அமுதுபடி வள நெய் அமுது ௨ பருப்பு அமுது ௩

3. வெல்லம் உ கறிஅமுதும் அப்பப்படி ஒன்றுக்கு அமுதுபடி முக்குறுணியும் நெய்அமுது அறுனாழியும் வெல்லம் பதக்கும் மிளகு உழக்கும் சீரகம் ஆழாக்கும் தேங்காய் ஒன்றும் ஆக சமைஞ்சு அமுது செய்து அருளி இந்தப்பிறஸாதமும் பண்ணியாரமும் நாலுவகையில் பெறக்கடவோமாகவும் இந்த தநூ ஸஞூாசிசூவரையும் நடத்தக்கடவதாகவும் இப்படி சம்மதித்து கெந்தமு திருமலை செட்டியாற்கு ஸிலாஸாஸனம் பண்ணிக்குடுத்தோம் பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் இப்படிக்கு ஜீயாள் ஸ்தானத்தார் பணியால் இவை கோயில் கணக்கு திருநயந்நூருடையான் திருவத்திஊர் விஜயன் பிரமனயன் எழுத்து

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | 7 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | - |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 604/1919 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : சம்புவராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 277 |
| அரசன் | : இராசநாராயணன் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோமில் அபிஷேக மண்டபத் தெற்குச் சுவர்

குறிப்புரை : திருவீதி உலாவின் போது யானை, குதிரை, கருட வாகனங்களில் பெருமாள் எழுந்தருளவும், திருத்தேர் விழாவின் போது கங்கைகொண்டான் மண்டபத்தில் எழுந்தருளவும், ஏகாம்பரநாதன் திருநாமத்துக்காணி திருத்தோப்புகளான சேரமான் பெருமாள் திருத்தோப்பு, அறங்பெருஞ்செல்வி திருப்தோப்பு, செண்பகத்தோப்பு, ஈசான் தேவர் திருப்தோப்பு ஆகிய நான்கு தோப்புகளிலும் இறைவன் எழுந்தருள வேண்டுமெனக் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[॥*] ஸகலலொகசக்கரவத்திகள் ஸ்ரீஇராசநாராயணன் சம்புவராயர்க்கு யாண்டு எ வது ஆனி மாதம் முப்பதாந்தியதி பெருமாள் அருளாளநாதன் கோமில் தானத்தார்க்கு நினைப்புபெருமாள் திருநாள் எழுந்தருளும் அளவில் ஆனைநம்பிரானிலும் குதிரைநம்பிரானிலும் ஸ்ரீகருடாழ்வானிலும் நகரி சோதனைக்கும் எழுந்தருளும் நாலுநாளும் மிறங்கின திருவீதி
2. யிலே எழுந்தருளுவிக்ககடவார்(ர)கள் ஆகவும் திருத்தேரில் எழுந்தருளும் அளவில் திருநாள்தோறும் ஏழாந் திருநாளின் அற்றைக்கு கங்கைகொண்டான் மண்டபத்து அளவாக எழுந்தருளு னால் மீள எழுந்தருளுவிக்க கடவாராகவும் உடையார் ஏகாம்பரநாதன் திருநாமத்துக்காணிஆன திருத்தோப்புகளில் சேரமான்பெருமாள் திருத்தோப்பு அறப்பெருஞ்செல்வி திருத்தோப்பு செண்

3. பகத்தோப்பு ஈசானதேவர் திருத்தோப்பு இந்நாலு திருத்தோப்பிலும் உடையாரை எழுந்தருளுவிக்கும்படியும் இப்படிக்கு கல்லுவெட்டி நாட்டி இது ஒழிய புதுமைபண்ணிச்செய்யாதபடியும் சொல்லிவிட்ட அளவுக்கு இப்படிக்கு தாழ்வற நடத்திப்போகவும் பார்ப்பதே இவை தென்னவதரையன் எழுத்து [॥*]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1393 |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1471 |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 613/1919 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 278 |
| அரசன் | : | விருப்பாக்ஷ தேவமகாராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிசேக மண்டபத் தெற்குச் சுவர்

குறிப்புரை : கல்வெட்டு முழுமையாக இல்லை. சாளுவ குலத்தைச் சார்ந்தவன் என்ற குறிப்பு காணப்படுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாமண்டலெஸ்வரந் ஹரியராய விபாடன் பாஷெக்குத் தப்புவராயர்கண்டன் மூவராயர்கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான் பூவ்வ தக்ஷிண பஸ்சிம உத்திரஸமுத்ராயிபதி இராஜாயிராஜந் இராயபரமேஸ்வரந் ஸ்ரீவீரப்ரதாப மஜவேட்டை கண்டருளிய தெவராயமஹாராயர் குமாரர் விருபாக்ஷதெவமஹாராயர் ப்ருயிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஶகாப்தம் ௲௩௱௯௰௩ ன் மேல் செல்லாநின்ற வர ஸம்வத்ஸரத்து மகர நாயற்று சு[பர*]பக்ஷத்து சதுத்தியும் புதவாரமும் பெற்ற அத்தத்து நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஸ்ரீமந் மஹாமண்டலெஸ்வர மெதினிமிஸர கண்டகட்டாரி சாளுவ சாளுவ , : . தெவமஹாராஜாவுக்கு நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயிலில் மஹாஸபையும் தானத்தாரில் பூவையும் திமராயரும்

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1464 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1542 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 614/1919 |
| மொழி | : தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 279 |
| அரசன் | : அச்சுதராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிஷேக மண்டபத் தெற்குச் சுவர்

குறிப்புரை : திருவத்தியூர் அருளாளப் பெருமாள் ஏகாதேசி தோறும் திருவீதி உலா சென்று திரும்பும் போது கெருட மண்டபத்தில் எழுந்தருளும்போது, இறைவனுக்கு தோசைப்படி படைக்க செல்லக்குட்டியார் என்பவர் 200 பணம் கொடையாக அளித்துள்ளார். இந்த 200 பணத்தினை சோமங்கலம் ஏரிப்பாசனத்தில் விளையும் திருவிடையாட்ட நிலத்தின் வழியாக வரும் அதிக வருவாயைக் கொண்டு செயல்படுத்திட வழிவகைச் செய்யப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. *ஸுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹா ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ஸ்ரீவீர ப்ரதாப ஸ்ரீவீரஅச்சுதராய மஹாராயர் ப்ருதிவிராஜ்யம்* பண்ணி அருளாநின்ற சகாப்தம் ௲௪௱௬௰௪ மேல்செல்லாநின்ற ஸுபக்ருது ஸம்வத்ஸரத்து மிதுந னாயற்று பூறுவபக்ஷத்து த்ரயோதசியும் ஆதித்யவாரமும் பெற்ற மூலநக்ஷத்ரத்து னாள் செயங்கொண்ட சோழமண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்து நகரங் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரோம் திருவத்தூர் மன்றாடியரில் தெமக்கணக்கு வெங்காரபுத்திறன் செல்லக்குட்டியார் பிள்ளைக்கு சிலாசாஸநம் பண்ணிக்குடுத்தபடி தங்களிட பொலியூட்டாக ஏகாதேசிதோறும் பெருமாள்

கிறாமப்பிறதக்ஷணம் எழுந்தருளித் திரும்ப கெருடமண்டபத்திலே எழுந்தருளி அமுது செய்தருள தோசைப்படி கட்டளை இட்டு பொலியூட்டாக குடுத்த ௫ ஊாருய இந்தப் ப

2. ணம் இருநூற்றன்பதுக்கும் திருவிடையாட்டம் சோமங்கலம் ஏரியிலே இட்டு அதில் போந்த முதலுக்குச் சிலவாக வருஷ௴ ஒன்றுக்கு ஏகாதேசி இருபத்துனாலுக்கு ஏகாதேசி ஒன்றுக்கு ஸ்ரீபண்டாரத்திலே விடும் தோசைப்படி ஒன்றுக்கு ஹிங்ச ல உழுந்து ந ௱ ஐ சக்கரை உ சீரகம் ஹி பாக்கு ருய இலை ா சாத்தியருள சந்தணப்பலம் க விட்டுவரக்கடவதாகவும் அமுது செய்தருளின தோசைப்படி க க்கு தோசை ருயக க்கு விட்டவன் விழுக்காட்டுக்கு தோசை யந க்கு இயல் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தோசை ச சென்னணன் ஆசாரியனுக்கு தோசை உ சடைகோப முதலியார் ஆசாரியனுக்கு தோசை க முறைக்கணக்குப் பிள்ளைக்கு தோசை க செய்யனூர் சிங்கப்பெருமாள் தீக்ஷிதற்கு தோசை க செல்லக்குட்டியார்பிள்ளை உபாத்யாயர் அன்பனூர் தொழப்பயங்கார் குமாரர் அநன்தயங்காற்கு தோசை க னாலு வகைக்கு தோசை ந ஆகவிட்டவன் விழுக்காட்டுக்கு தோசை யந பாத்திற சேஷ௴ தோசை உ

3. முறைக்காறிக்கு தோசை க ஆகத் தோசை யகூ னின்ற தோசை முப்பத்தஞ்சும் னாலு வகையிலும் பெறக்கடவோமாகவும் இந்த பிற[க]ார(ர்)த்திலே இருபத்தினாலு ஏகாதேசிக்கும் விடக்கடவோமாகவும் இருபத்துனாலு தோசைப்படியும் பாக்கு வெற்றிலை சந்தணமும் ஸ்ரீபண்டாரத்திலே விட்டு ஆசந்திறாற்கஸ்தாயி ஆக னடக்கக்கடவவ[ர்*]கள[ா*]கவும் இப்படி சம்மதித்து சிலாசாஸநம் பண்ணிக்குடுத்தோம் செல்லக்குட்டியார் பிள்ளைக்கு பேரருளாளர் கோயில் ஸ்தானத்தாரோம் இவை கோயில்கணக்கு தினையமே[ந]ரிஉடையார் திருவத்தி ஊர் பிறியன் பிரமனயினார் புத்திறன் ஆனைமேலழகியான் எழுத்து [||*] ஸ்வதத்தாம் பரதத்தாம் வா யோ ஹரேத வஸுந்தராம் ஷஷ்டிர் வர்ஷ ஸஹஸ்ராணி விஷ்டாயாம் ஜாயதே க்ருமி: [||*] (ஏக ஏவ ஸுஹ்ருத் தர்மோ நிதனேப்யனுயாதி ய:)

[||*]

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் :- 280

மாவட்டம் : காஞ்சிபுரம்

வட்டம் : காஞ்சிபுரம்

ஊர் : காஞ்சிபுரம்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : தெலுங்குச் சோழர்

ஆட்சி ஆண்டு :

வரலாற்று ஆண்டு :

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 625/1919

முன் பதிப்பு :

ஊர்க் கல்வெட்டு எண் : 280

அரசன் : மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன்

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிசேக மண்டப மேற்குச் சுவர்

குறிப்புரை : மிகவும் சிதிலமடைந்தக் கல்வெட்டு மதுராந்தகப் பொத்தப்பிச்சோழன் திருவிளக்குக் குடிமக்களுக்கு வரியினை மானியமாக அளித்துள்ளான்.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[॥*] மதுராந்தகப்பொத்தப்பிச்சோழன் ஓலை. . . . .
2. தானத்தார் [க]ண்வெடைபெருமாள் திருவிளக்குக்குடிமக்கள் பே . . . . .
3. மகமை ஷ முதல் ஸவ_ மாநியமாக விட்டோம் இப்படிக்கு . . . . .
4. டத்திக்கொள்வத[ா]கச் சொன்[னோ*]ம் இப்படி செய்வதே இவை
5. எழுத்து [॥*]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1450 |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1528 |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 633/1919 |
| மொழி | : | தமிழ், சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : | – |
| எழுத்து | : | தமிழ், கிரந்தம் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 281 |
| அரசன் | : | கிருஷ்ணதேவராயர் | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் அபிசேக மண்டப கோபுர மேற்குச் சுவர்

குறிப்புரை : கல்வெட்டு முற்றுபெறவில்லை. அரசர் பெயர் மற்றும் சக ஆண்டு மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஶுபமஸ்து ஸ்வஸ்தி [II*] ஸ்ரீமந் மஹாராஜாதிராஜந் ராஜபரமேஸ்வரந் மூவராயர்கண்டந் [அரி]ய
2. ராயவிபாடந் அஷ்டதிக்குராய மனோபயங்கர பாஷைக்கு தப்புவராயர் கண்ட ஊவ
3. ராயர்கண்ட பூர்வ்வ தக்ஷிண பஶ்சிம உத்திரஸமுத்ராதிபதி யவனராஜ்ய ஸ்தாபநாசார்ய் கஜபதி
4. விபாட ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீரக்ருஷ்ணதேவமஹாராயர் ப்ருதிவீராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஶகா
5. ப்தம் சூசாருய ன் மேல் செல்லாநின்ற ஸர்வதாரி ஸம்வத்ஸரத்து மிதுன னாயற்று அபரபக்ஷ
6. த்து பஞ்சமியும் [ஆ]தித்தவாரமும் பெற்ற சதயத்து னாள் நகரங் காஞ்சிபுரம் திருவத்தியூர் நின்றருளி
7. ய அருளாளப் பெருமாள் கோயில் சீயர்களும் தானத்தாரும் மேற்படியூரில் சாத்தாத ஸ்ரீவயிஷ்ணவர்

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் :- 282

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : சகம் 1359 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1437 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 634/1919 |
| மொழி | : சமஸ்கிருதம் | முன் பதிப்பு | : – |
| எழுத்து | : கிரந்தம், தமிழ் | | |
| அரசு | : – | ஊர்க் கல்வெட்டு எண் | : 282 |
| அரசன் | : – | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோமில் இரண்டாம் திருச்சுற்று மேற்குச் சுவர்

குறிப்புரை : அநபோத நாயக்கர் மகனும் சிங்க நாயக்கர் சகோதரனுமாகிய வஸந்தராயர் என்பவர் இரண்டாம் மற்றும் மூன்றாம் கோபுரங்களில் நான்கு துவாரபாலகர் சிற்பங்கள் வைத்தச் செய்தி.

**கல்வெட்டு :**

1. ஸ்ரீ꞉ஜெ ௲ராஜாநுஜாய ௱꞉ [॥*] இரண்டாந்திருவாசல் மூன்றாந்திருவாசல் சண்

2. டவூ சண்டர்கள் வஸந்தராயன் கைங்கரியம்[॥*]யஉ꞉ாஜொகஜெ ஜியூந

3. ஜாஸ்யா ஜெ ஸமஹெஉ விஂமஜெ ஹஉாயாஂ ஸமுவணெமுறெளகுரிமிறெ ஹ[யொ]

4. ஜூ꞉ரயொ : । ஜூ : வாஜ வூகிஜா ஜஃஷெ ஒகஜொஜெ ஜஉ꞉ஹாவஂஸஹ ஜூ க்ஷீ

5. [வாந்ந]வொகநாயக கவஸ்ஸிஜீவ꞉ஸஜெஸுர : । [ஜகூடாநு] கஜொஜுஷ ஹரய :। கரி ஜெ[ஸ]-

6. ஜெஸரயஸு காஜுஜந । சுந ஜெ[வ]ாக ஜஹீவஜரவகுஜவூயிக ஸிஂம [ண]-

7. நாயிகாநுஜஊ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | 3 |
| வட்டம் | : | காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1253 |
| ஊர் | : | காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 636/1919 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு எண் | : | 283 |
| அரசன் | : | – | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோமில் அம்மன் சன்னதி நுழைவுவாமில் வலதுபுறச் சுவர்

குறிப்புரை : வயலாமூர்ப் பற்று நல்லாலம் என்னும் ஊரிலிருந்து பெறப்படும் வரிகள் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. ஏற்கனவே திருவிடையாட்டமாக உள்ள இவ்வூரில் பலதளி பூசை, கல்வியில் வல்ல பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் சாகைப்புறம் (வேதங்களை கற்றுத் தருபவர்களுக்கு அளிக்கப்படும் நிலம்) நீங்கலாக ஏனைய நிலங்கள் மற்றும் அனைத்து வரிகளும் இறையிலி ஆக விடப்பட்டுள்ளன.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ[||*] . . . . . . . . . . காஞ்சிபுரத்து பெருமாள் அருளாளநாதன் கோயிற்கணக்குப்பிள்ளைக்கு நிருபம் விலவங்க வருஷம் பங்குனி மாதம் ௰௨ தியதி அனுப்படி வயலாமூர்ப் பற்று நல்லாலம் இதன் எதிராமாண்டு கீலக வருஷம் ஆடிமாதம் முதலுக்கு சந்த்ராதித்த வரையும் செல்ல ஸர்வமான்ய இறையிலி ஆக நன்செய் புன்செய்

2. நான்பா . . . . . . . . . . ருவிடையாட்டம் ஆகத் தன்த அளவுக்கு இவ்வூரில் ஸபைவசத்தில் உள்ள மரியாதி பலதளிபூசை பாதி பட்டவ்ருத்தி சாகைப்புறம் நீங்கலாக கடமை பொன்வரி காணிக்கை வாசல் பணம் விறணம் எடுத்தளவு விருத்துப்படி தெண்ணாயக்கர் காணிக்கை நாம் கொள்ளும் காணிக்கை

3. ஊர்வரி. . . . . . . காணிக்கை உகஸொஹகாணிக்கை நல் எருது நற்கிடாரிஇ காணிக்கை விரிமுட்டு ஆசு பொதுமக்கள் பேரால் கொள்ளுங்கடமை ஊர்க்காசு தட்டார் பொலி ஊசிவாசி காஸா யக்குடிமக்கள் பேரால் மகமை இனவரி [தனி]ப்பணம் மாவடை வெட்டிவரி செக்குக்கடமை திருப்புதியிது

4. க்கு அ. . . . . . . . ழுக்கு நீர்ப்பாட்டம் மற்றும் கொள்ளும் பலவரிகளும் பல உபாதிகளும் உட்பட விட்ட அளவுக்கு திருகட்டளைக் கல்லிலும் வெட்டி திருவாழிக்கல்லும் நாட்டிக் கொள்ளவும் இவை கொப்பணன் எழுத்து விலவங்க வருஷ௯ பங்குனி மாதம் ௰௨ தியதி எதிரிடை இட்டது

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : காஞ்சிபுரம் | ஆட்சி ஆண்டு | : | சகம் 1415 |
| வட்டம் | : காஞ்சிபுரம் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1493 |
| ஊர் | : காஞ்சிபுரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 638/1919 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 284 |
| அரசன் | : – | | | |

இடம் : அருளாளப்பெருமாள் கோயிலில் தாயார் சன்னதி நுழைவு வாயில் வலதுபுறச் சுவர்

குறிப்புரை : கொம்மராசப் பெரிய திம்மராஜ உடையாரின் மனைவி நரசாதேவியார் என்பவள் பேரருளார் வழிபாட்டிற்காக அமுதுபடிகள் வழங்கிட பணம் வழங்கியுள்ளாள்.

**கல்வெட்டு :**

1\. . . . . . . . . . ண்டஸெ்வர. . . . . கண்டகட்டாரி சாளுவ நரசிங்கராயர் மகாராயர் குமாரர். . . . . . . . . . . . யுவிராஜ்யஂ வண்ணியருளாநின்ற ஶகாப்தஂ சுசாயரு ன் மேல்செல்லாநின்ற ப்ரமாதிச ஸஂவற்[ஸ]ரத்[து] மெஷநாயற்று பூர்வபக்ஷத்து . . . . . . மி கூடின சோமவாரத்து னாள் செயங்கொண்ட சோழமண்டல

2\. . . . . . . . . . . . . த்து நகரம் காஞ்சிபுரம் திருவத்தியூர் னின்றருளிய அருளாளப்பெருமாள் கோயில் ஸ்ரீப. . . . . . . . .ண்டலெசுர கொம்மராசப்பெரியதிம்மராச உடையர் தெவியார் நரசாதேவியற்கு சிலாசாஸனம் பண்ணிக்குடுத்தபடி தம்மிடைய உபயமாக அருளாளப்பெருமாளுக்கு னாள் தோறுமொருதளிகை அமுது

3\. . . . . . . . . . . . . ததுகையிலிந்தப்பணத்துக்கு பலிசைக்குச் சிலவாக நாளொன்றுக்கு ஸ்ரீபண்டாரத்திலே அரியவல்லான்காலாலமுதுபடி குறுணியும் பருப்பமுதுரியம் நெயமுதாழாக்கும் சக்கரையமுதொருபலமும்

4. . . . . . . . . . .ழ தமக்கு வருகிற விட்டவன் விழுக்காடு நாலிலொன்றுக்கு ப்ரஸாதமிருநாழியும் நாள்தொறுமிரண்டு திருமாலைசாத்திற பெருமாள்தாதர் பெறக்கடவராகவும் நின்ற ப்ரஸாதமறுநாழியும் நாலுவகையிலும் பகுந்து கொ

5. . . . . . . . . . . .லாஶாஸனம் பண்ணிக்குடுத்தோம் கொம்மராசப்பெரிய திம்மராசஉடையர் ஜெவியார் நரசாஜேவியாற்கு பேரருளாளர் ஸ்ரீபண்டாரத்தாரோம் இவை கோயிற்கணக்கு சீயபுரமுடையான்

6. . . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :- 285**

மாவட்டம் : காஞ்சிபுரம்

வட்டம் : காஞ்சிபுரம்

ஊர் : காஞ்சிபுரம்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : பாண்டியர்

அரசன் : பராக்கிரம பாண்டியன்

ஆட்சி ஆண்டு : 6

வரலாற்று ஆண்டு : –

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 640/1919

முன் பதிப்பு : –

ஊர்க் கல்வெட்டு எண் : 285

இடம் : அருளாளப்பெருமாள் கோயில் தாயார் சன்னதி நுழைவு வாயில் இடதுபுறச் சுவர்

குறிப்புரை : செயங்கொண்ட சோழமண்டலத்து புழல் கோட்டமான விக்கிரமசோழ வளநாட்டு புழல் நாட்டு ஆம்பல்வாய் மணலூர் ஊர்த் தலைவன் திருக்காளத்தி உடையார் மற்றும் இவனது தம்பி வடுகநாதர் ஆகிய இருவரும் படைப்பற்றான தேவப்பெருமாள் நல்லூரில் 2000 குழி நிலம் ஒன்றினை ஸ்ரீபண்டாரத்தில் நூறு பணம் கொடுத்து வாங்கி திருநந்தவனம் அமைக்க வழிவகைச் செய்துள்ளனர்.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] திருவாய்க்கேழ்வி முன்னாக கோமாறபன்மர் த்ரிபுவநச்சக்ரவர்த்திகள் ஸ்ரீபராக்ரம பாண்டியதேவற்கு யாண்டு ௬ வ்ருஷபநாயற்று பூர்வபக்ஷத்து

2. த்ரிதியையும் திங்கள் கிழமையும் பெற்ற அநிழத்து நாள் செயங்கொண்ட சோழமண்டலத்து புழல் கோட்டமான வி[க்]கி[ர]மசோழ வ

3. ளநாட்டு புழல்நாட்டு ஆம்பல்வாய்மணலூர் கிழவன் திருக்காளத்தி உடையாற்கும் இவர் தம்பி வடுகநாதற்கும் நிலவிலையாவணம் பண்ணிக்குடுத்த ப–

4. ரிசாவது ஏயில் கோட்டத்து நகரம் காஞ்சிபுரத்து பெருமாள்கோயில் தானத்தாரோம் ஊற்றுக்காட்டுக் கோட்டத்து பெருமாள் திருநாமத்துக்காணி

5. படைப்பற்றான தேவப்பெருமாள் நல்லூரில் பல்லவராயர் திருநந்தவனத்துக்கு கிழக்கு தொந்தி குழியன் செறுவில் கீழைவரப்புக்கு மேற்கு காலுக்கு வடக்கு திருவே

6. கா ஆற்றுக்கு தெற்கு பாயவாணியன் குழி உட்பட இன்னான் கெல்லைக்குட்பட்ட மேனோக்கின மரமும் கீணோக்கின கிணறும் பாகமும் பாகாஶ்ரயமும் உட்பட நாடளவு கோலால் உகூ ம் இக்

7. குழி இரண்டாயிரத்துக்கும் எம்மிலிசைந்து விலைப்பொருள் அன்றாடு நடக்கும் . . . . . . . . டான ‍௪ ா இபணம் நூற்றுக்கு இக்குழி இரண்டாயிரமும் பிறர்கேடு நினையாதான் திருநந்

8. தவனமாகச் செய்யக்கடவதாகவும் இக்குழி இரண்டாயிரமும் தங்களுக்கு திருமலை சாத்தும் தாஸநம்பிமாரில் கெருடன்மேல் அழகியபெருமாள் தாஸநான் . . . . .

9. இடுவித்து திருநந்கவனம் செய்விக்க கடவர்கள் ஆகவும் இப்பணம் நூறும் ஸ்ரீபண்டாரத்திலே ஒடுக்குவித்துகொண்டது இப்படி சம்மதித்து நிலவிலைப்ரமாணம் பண்-

10. ணிக்குடுத்தோம் பெருமாள் கோயில் தாநத்தோம் ௨ இவை பெருமாள்தாதன் எழுத்து இவை தேவணன் எழுத்து இவை ஸ்ரீவாஸுதேவ ஹட்டநீ எழுத்து இவை அப் . . எழுத்து ௨

